உ

சிவமயம்.

ஸ்ரீ சற்குருப்யோ நம:

கோவிலூர் மடம்

# ஸ்ரீ அருணாசல ஞாந தேசிகர்

# தோத்திரம்.

KOVILOOR MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA

இது

கோவிலூர் மடம்

ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞாநதேசிக ஸ்வாமிகள்

அவர்கள் மாணாக்கர் பலருள்

ஒருவர் இயற்றியது.

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்

பரிசோதிக்கப் பெற்று

கோவிலூர் மடாதிபதி

ஸ்ரீல்ஸ்ரீ மஹாதேவ ஞாந தேசிக ஸ்வாமிகள்

பொருளுதவி பெற்று

மதுரை

மீநலோசநிப் பிரசில்

பதிப்பிக்கப்பெற்றது.

1930.

669

24-4

உ

சிவமயம்.

அருளிறை

# ஸ்ரீ அருணாசல ஞான தேசிகர் தோத்திரம்.




—o—

## அகவல்.

திருவளர் நறவார் செந்தா மரையின்
மருவு மயன்கை மணிதனை யடிப்பத்
தடத்தின்வாழ் முதலை சார்ந்திடு மிருந்த
திடத்தா லீர்த்திடச் செம்பொனம் பூண்பனை
கோடுடை மதஞ்சார் குஞ்சரந் தளர்நடை
ஈடுடைந் தார்தன் னெழில்வா யதனால்
ஆதிமூ லத்துக் கபய மென்றிடும்
போதிலே மிகுந்த பொருவிலா வருளால்
விரைவினிற் கருடன் மீதெழுந் தருளிப்
புரையிலா வண்ணம் புரந்தருள் புரிந்த
கார்நிற வண்ணன் கவின்மத் தளத்தை
சீர்பெருங் கரத்தாற் சிறக்கத் தொனிப்ப
பிறைபோல் வளைந்து பிறங்கு நுதலுங்
குறைவி னறவார் குமிழ மலரை
யுறழக் குவிந்தே யொளிருமூக் கோடு
நிறந்தரு நயனமு நீலோற் பலத்தி
னித்திலக் கோவையி னிறைந்தபல் வரிசையு
மொத்திடு பவளத் தொப்பறு மதரமுந்
தாமரை போலுந் தண்ணென மலர்ந்த
காமர்சார் முகமுங் கார்வரை யெனவே

நெடிய புயங்களி னேர்வளைக் கொடியின்
வடிந்த காதும் வளர்கமு கதினேர்
உன்னிதக் கழுத்து மொளிர்கும்ப மெனவே
மின்னிடு கொங்கையும் விளங்கிடு நூலென
நுண்ணிய விடையு நொய்யவா லிலையின்
நண்ணிய வயிறு மாகிய விவைமுத
லலங்கா ரங்க ளனைத்து நிறைந்தே
இலங்கா நிற்கு மெழிலுமை மகிழ
வானுல கோரு மண்ணுல கோருந்
தானுவந் தோன்றிச் சயசய வென்றிடச்
சச்சிதா நந்தன் றண்புன லதில்வரு
நச்சிய கடிந நற்பிரு திவியொடு
வெம்மையக் கினியில் வெளிப்படு புனலுஞ்
செம்மையா யெவர்க்குஞ் சீதோட் டிணந்தரு
வாயுவிற் சனித்தே வயங்குமக் கினியும்
ஏயுமா காயத் தியங்கிடு வாயுவும்
எவைக்கு மிடமா யிருந்திடா காயமும்
இவையவை யென்ன விசைத்திடு பேதமொன்
றின்றி யனைத்தையு மியல்பாய் விளக்கு
மொன்றிய கிரண வொண்கதி ரவனுஞ்
சீதக் கலைகள் செறிந்தொளிர் மதியும்
போதஞ் செறியாப் பொறியோ டொன்றிடு
மனதோ டொன்றி வயங்கு புமானு
மெனவே யிசைத்திடு மெண்பொரு ளொருவன்
பஞ்ச கிருத்திய பரன்ப ராபரன்
நஞ்சணி கண்ட னமச்சி வாயன்
கண்ணிடந் தப்பிய கண்ணப் பரையு
மண்ணிற் றவம்புரி மார்க்கண் டரையும்
பிள்ளைக் கறியொடு பிச்சையிட் டருளிய
தெள்ளிய வன்பாஞ் சிறுத்தொண் டரையும்



தந்தையைக் கடிந்த தண்டி சரையுஞ்
சிந்தையை யடக்கிச் செறிந்தநல் லன்போ
டுருகினன் னெஞ்ச முலைமெழு கெனவே
திருவா சகமுதற் சீர்பெறுந் துதிகள்
வழுத்தி வணங்கிய வாதவூ ரரையும்
அழுத்துங் கல்லை யடல்புணை யாக்கொடு
புணரியைக் கடந்த புனிதவப் பரையும்
அணங்கெனும் பரவைக் காசை பொருந்தித்
தூது நடாத்திய சுந்தரர் தமையும்
ஏதும் புனித மிசையாச் சமணரைத்
தாங்கழு வேற்றிய சம்பந்தர் முதலிய
தீங்கறு மன்பர் திருவடி யாரையும்
பேரா நந்தப் பெருங்கடல் சேர்த்தவன்
பாரா தெவரையும் பதைக்க வதைக்குங்
காலன் பதைத்திடக் காலா லுதைத்தவன்
ஆலம தொத்த வடல்செறி ராவணன்
அரும்பா தலத்தே யாழ்ந்து தளரப்
பெருவிர லூன்றிய பேதமில் பிஞ்ஞகன்
புலன்வழி செல்லாப் புண்ணியர் தமையு
நலன்கெட மாதரை நச்சி யிடப்புரி
காமனை நன்னுதற் கண்ணை விழித்தும்
பூமலி தனிமுப் புரமது தன்னைப்
புன்சிரிப் புற்றும் பொன்ற வெரித்தவன்
அன்பர்க் கெளிய னலாதார்க் கரியன்
பரம சிவனற் பதஞ்சலி தனக்கும்
வாத வியாக்கிர பாதமா தவர்க்கும்
இரங்கித் தும்பை யெழிற்று ராடப்
பிரச நிறைந்தே பிறங்குபொற் கொன்றைத்
தாரொடு சிறுபிறைச் சந்திர னொடு
வேருறு தூதன் னிருநதி யாட

அநந்த கோடி யருக்கனி னொளிருங்
கனஞ்செறி மணியார் கவின்படந் தன்னை
விரித்தே யநந்த மிளிரா வாடத்
தரித்த செஞ்சடை தானசைந் தாட
வுவமையி லொளியார்ந் தொளிவிடு மொப்பி
னவமணி யிழுத்திய நற்குண் டலங்கள்
குழைக்கா தணியொடு கூடிநின் றாடப்
பழைய வெண்பணி பதைக்கமுப் புரிநூல்
சோதியார் மார்பிற் றுலங்கிநின் றாடச்
சாதிமான் கன்றது சத்தமிட் டாடச்
செய்ய மாவொளி செறிமழு வாடத்
துய்ய களிறுரி துவண்டுநின் றாட
வண்டங் களுமதி லார்புவ நங்களும்
எண்டரு பொருள்க ளியாவும் கிடுகிடென்
றாடவீ ரகண் டாமணி யணிந்த
தாடனைத் தூக்கித் ததிங்கத் தோமென
வென்றுமா நந்த வெழினடம் புரிந்தே
நின்றுசிற் சபையுந் துகளறு மநதாற்
பாவா தீதம் பற்றிய புரிதரும்
ஓவா தெங்கு மொளிர்பரி பூரணந்
தன்னைக் கருதித் தளர்வின் முனிவரும்
பொன்னைப் போனிறம் பொருந்திய புவிமுத
லான பொருள்க ளனைத்துஞ் சிவனெனத்
தானறிந் தந்நிலை சார்ந்தவுத் தமர்களும்
அருளிறை வடிவமன் பாலுனு மவர்களு
மருளறு பிரணவ மாதிமந் திரங்களை
வஞ்ச மறுத்துனு மனமுடை யோர்களும்
பஞ்சாக் கிநிநடுப் பண்பா யிருத்தன்
முதலிய தவம்புரி முரணற் றவர்களு
நிதமகம் புரிந்திடு நிந்தையற் றவர்களும்



இல்லறத் திருந்ததற் கியல்பா மியவறம்
எல்லா மியற்று மினையில்புண் ணியர்களும்
அட்டமா சித்தி யடைந்ததிண் ணியர்களும்
இட்ட மாயிய மாதி யியற்றிக்
கற்பகா லத்துங் கழியா தவர்களும்
அற்புதப் பத்தி யமைத்தே யநுதினம்
அரிசிவ நாமசங் கீர்த்தந மாதி
உரிமையாய்ச் செய்பவ ரொக்கவும் பொருந்திய
வுதய மலரி லுதித்துக் கனிந்த
கதிரவக் கனிதரு கருங்கடற் றருவுங்
கார்செறி மற்றக் கனித்தரு வனங்களும்
ஓர்வரு மண்டமோ டுலவுமா மேடையுஞ்
சூழ்ந்த தனியார் சுந்தரத் தில்லையிற்
றாழ்ந்து வணங்கித் தளர்வற வெவருந்
திருவுரு வோடரு ணாசல தேவென
ஒருபெயர் புனைந்தே யொளிரும் பரனே
அகண்டமெய்ஞ் ஞாந மணைந்தபே ரின்பே
திகழ்ந்த துரியா தீதச் சுடரே
சுத்தனே யமலா சுயம்பிர காச
முத்தனே யெவைக்கு முதல்வனே யழியா
நித்தனே குணங்களி னிர்க்குண வடிவே
யத்தனே நழுவா வச்சுத வசங்க
வேகனே தொன்னவ மின்றிய வமிர்த
போகனே நிறைபரி பூரணப் பொருளே
சருவஞ்ஞ னருஞ் சருவே சுரனே
நிருவி கார நீடொளிப் பரப்பே
சின்மய மாயொளிர் சிவமே யனைத்துந்
தன்மய மாயொளிர் சாந்தத் துவனே
அவத்தைக ளனைத்து மகன்றசிற் பரனே
சவத்துவத் தூல சரீரா திகட்கு

விலக்ஷண மாகி மிளிர்ந்திடும் வத்துவே
யலக்கண் செறிந்தே யழிந்திடும் பஞ்ச
கோசங் கடந்தொளிர் குன்று மணியே
பாசமா முகிலைப் பறத்துமா ருதமே
தாபாக் கினியைத் தணிக்குமா மதியே
யாபா சமதா மவித்தை யிருளைத்
தெறவுதித் தருளிய சிவசூ ரியனே
மறப்புறச் செய்திடு மாவா ணவமாம்
வெயிலா லுலர்ந்தே மெலிந்திடுஞ் சீவப்
பயிர்க டழைத்திடப் பரம ஞானமா
மழைதனைப் பொழியு மாவருண் முகிலே
விழைவினை விளைக்கும் வினைத்திரை செறிந்த
பிறவி யென்னும் பெருங்கடல் கடத்தும்
அறஞ்செறி யின்பம தாமரக் கலமே
பாப்பிர மத்திற் பழுதையிற் பாம்பு
நிரந்தர வானி னீல நிறமுங்
கட்டையிற் கள்ளனுங் கானலிற் புனலும்
இட்டமாஞ் சுத்திகா விரசத மும்போல்
உத்தமர் களுக்கு முணர்வதற் கரிதாம்
பெத்தர் தருமுக் குணப்பிர கிருதி
தோன்றிய தெனவுஞ் சொல்லிய வதுசா
ரான்றசத் துவத்தோ டணைந்த விராசதந்
தாமத மெனவுஞ் சாற்றுமுக் குணங்களிற்
சோமன் முதலிய துலங்கும் வானெனத்
துலங்குசிற் சாயை தோன்று மெனவுஞ்
சலனமில் சத்துவந் தான்மாயை யெனவும்
இதிற்பதி பிம்ப மீசு ரனெனவும்
இதிலி ராசத மவித்தை யதனிற்
சேர்பதி பிம்பஞ் சீவர்க ளெனவுங்
காரண சரீரங் களறிய விதுவென



வார்ண மனைத்து மறையு மெனவுஞ்
சீரறு தாமதஞ் சேர்பதி பிம்பம்
உட்புறங் களிலே யொன்றிடு பேதம்
எட்புரை யவுமே யெவரு முணரா
வண்ண மறைத்து மறுவறு தத்துவ
நண்ணிய தத்துவ ஞாநிக டமையும்
இறைவ னென்னு மீசன் றனையு
மறையா மூடவா வர்ணமும் விவிதமாம்
விக்ஷே பமுமா மிளிரிவை யிறைவன்
றுச்சமி லருளாற் றோன்றிய வெனவும்
விளம்பிய வந்த விக்ஷே பத்திற்
களங்கமில் வானதிற் காற்றதிற் றீயதில்
நீரதிற் பிருதிவி நேர்ந்த தெனவுஞ்
சேரிவை முக்குணஞ் செறிந்திடு சூக்கும
பூத மெனவும் புகன்றதி னுடைய
பேதமில் சத்துவப் பெருங்குண மதனில்
ஓரொரு மாத்திரை தானெடுத் தொன்றாய்ச்
சேர்ந்த தந்தக் கரணம தெனவும்
ஆன்றி லெடுத்துவே றாகச் சேர்த்தது
ஞானவிந் தியங்களாய் நண்ணிய தெனவு
மிங்ஙன மிராசதத் தெடுத்துச் சேர்த்தது
பங்கம தொன்றிலாப் பஞ்சவா யுக்களுங்
கன்மவிந் தியமுமாங் கழறிவை சூக்கும
தனுவ தெனவே சார்ந்திடு மெனவும்
ஐந்து பூதமு மையிரண் டாக்கி
ந்ந்தலில் பாதியை நன்னான் காக்கித்
தந்தம் பாதியைச் சாராது மற்றைய
வந்தன வால மாபூத மிதுவே
தந்தன் றால தநுவொ டண்டமும்
புவனந் தடனே போகமு மென்ன

முவமையி லிவைகளை யொவ்வொன் றாக
முறையே யடக்கி மொழிவரும் பரத்தைக்
கறையற வுணர்வது காண்முத்தி யெனவு
முள்ள படியே யோர்ந்துண ராதது
விள்ள வரிய மிகுபந்த மெனவு
மொழிதரும் பரம மோனநற் கிளியே
நிழலெனப் பிரியா நின்மல வடியரோ
டென்னையு மாண்ட வெழில்சற் குருவே
யன்னையே யப்பா வருட்பெருங் கடலே
தன்னைத் தானென வுணராத் தன்மையேன்
றுன்னிரு காலெனுந் தூணது நிறுத்தித்
தசைமணி லுதிர்த் தண்ணீர் சேர்த்துப்
பிசைந்து நன்றாய்ப் பெருஞ்சுவர் வைத்துப்
பழுவெலும் பென்னும் பகர்மல் லுயர்த்தி
யழுத்திச் சிறுவெலும் பாம்பட் டியலை
நரம்பெனுங் கயிற்றா னன்கு வரிந்து
திரம்பெறத் தோலைச் சிறக்கப் போர்த்து
மயிர்க்கற்றை தன்னை வளம்பெற விரித்துக்
கைக்காற் றுடிக் கம்பது தூக்கி
ஒன்பது வாச லொளிர்வுற விட்டுத்
துன்ப மின்பர் துதைபொருள் புதைத்து
மலமுடை நாற்ற வாசனை நிறைந்த
தலமெனப் புழுக்கள் சார்ந்து வாழ்வுறு
மிக்கா யத்தை யானெனும் புன்மையேன்
மைக்கார் வரையென மாபா தகங்கள்
செய்திடுங் கடையேன் சிறுமிக டங்கள்
மெய்தனிற் புணர விருப்புறும் பேதையேன்
சத்தியந் தவிர்ந்து தள்ர்வுறும் பாவியேன்
உத்தம குணங்க ளொன்றுமி னீசனேன்
சற்சங் கத்தைச் சாரா தகன்ற



துற்குண னாகிய தொண்டனேன் புரியும்
பெரும்பிழை யனைத்தும் பிறங்குபேர்
அருளாற் பொறுத்தெனை யாள்வதுன் கடனே.

முற்றிற்று.

---

## சற்குரு வணக்கம்.

### வெண்பா.

சற்குருவை நெஞ்சே சதாகால முன்னினவா
யுற்பவநோய் சாரா தொழியுமே—சிற்பிரமந்
தானாகித் தானதுவாய்ச் சாரலாம் பேரின்ப
மானுமை யென்றே யறி. (1)

அறிவுக் கறிவா யமர்சற் குருவை
மறிதிரையைப் போன்மாறி மாறிப்—பிரிவறியும்
பேதை மனமே பிரிவதற நீகருதி
வாதையில்பே ரின்பமதாய் வாழ். (2)

வாழ்வாய் மரகதத்தை மாணிக்க மாமலையைத்
தாழா வருணிறைந்த சற்குருவைப்—பாழான
பெந்தத்தி லாழ்மனமே பேணிவணங் கித்துதித்துச்
சிந்தித்துப் பேரின்பஞ் சேர். (3)

சேர்ந்தவரைத் தன்மயமாச் செய்யுந் திருவடிகள்
ஆர்ந்தவரைச் சற்குருவை யன்புமிகச்—சார்ந்தே
இடைவிடா துன்னி யெழின்மனமே போற்றித்
தடையிலா வானந்தஞ் சார். (4)

சார்வா யுவமையிலாத் தன்மையனைச் சற்குருவைத்
தேர்வா ருளத்திற் றிகழ்பொருளைக்—கூர்வாளி
போல்விடயத் தென்றும் புகுமனமே நீநினைதி
யேல்வாம்பில் பேரின்ப மே. (5)

KOVILUR MADALAYAM
KOVILUR-630 307
NAGIRI VIA

ஏகாந்த மான விதயகம லத்துறும்
வாகான துய்ய மகரந்தம்—பாகான
சற்குருவை நெஞ்சே தடைகளறச் சிந்திக்கில்
நிற்குணநல் லின்புறுவாய் நீ. (6)

நீடொளியை யாணவத்தை நீக்குந் தனிமுதலை
யீடிலெளிற் சற்குருவை யேயநிச—நாடியே
வந்திக்கி னீமனதே வன்பவநோய் தீர்ந்தென்று
மந்தமில்பே ரின்புறுவா யால். (7)

ஆலநிக ரிச்சை யறும்பரமா நந்தரசஞ்
சாலப் புசித்தே தளர்வறுவாய்—கோலமறை
கூறறியாத் தத்துவனைக் கோதிலருட் சற்குருவை
யீறில்மன தேநினைதி யேல். (8)

ஏலக் குழலார்க ளிச்சைவலை யைக்கடந்து
மாலில் பரமசுக மன்னுவாய்—ஞாலமதில்
வஞ்சப் பவமறுக்கு மாகருணைச் சற்குருவை
நெஞ்சமே நன்றாய்நி னை. (9)

நினைப்புமறப் பின்றி நின்மலமாய் நிற்குந்
தனைத்தருநற் சற்குருவைத் தானே—தினைப்பொழுது
நீக்கமற நெஞ்சே நினைந்து வணங்குதியேல்
தாக்கறுநல் லின்புறுவாய் தான். (10)

---

பொருளா றியைநச் சிப்புவி யோரை சுமதேவ
தருவே யழகே சாமத கற்று வெனத்தளரா
தருளே திருவுரு வர்வொளி ரருணா சலவிறையை
புருகித் துதிசெய் தேயுனி யொழியாச் சுகமுறுவாம்.

---



## ஆநந்தக் களிப்பு.

சச்சிதா நந்தசி வோகம் [illegible]ந்த
தற்பத லக்ஷியஞ் சகத்கா ரணைகஞ்
சச்சிதா நந்தசி வோகம்.

சீர்செறி யென்றோழிப் பெண்ணே யென்னை
சேர்ந்து விடாதே நிரவிற்றி நீயே
கார்செறி யாணவ மற்றுக் காணக்
காக்ஷிநா மாகிக் களிப்புற லாமே. (1)

ராகத்து வேஷகா மக்குரோதம் லோப
நவின்மோக மதமச்ச ரத்துட னிராசை
ஆத்ம சூயையி டம்பர் தற்ப
மாங்காரத் திட்டைவி டுப்போநாந் தோழி. (2)

நித்தியா நித்திய விவேக மூத
னின்றிடு மீரிரு சாதன மான
உத்தம பக்குவந் தன்னை யின்றே
யுற்றுவி ளங்குவோ மொண்டொடி யோநாம். (3)

தாபத்தி ரயவி ரகந் தன்னாற்
சற்குரு வாகிய நந்நாய கன்றாண்
மாபத்தி யோடு பணிவா மின்ப
மாறா தளிப்பான் மயிலேயென் றோழி. (4)

மெய்யுணர் வின்பன் விமலன் வேத
வேதாந்த மீதொளிர் மெய்ப்பொரு ளானோன்
பொய்யுணர் வற்ற புனிதன் பரி
பூரண னென்று புந்திசெய் தோழி. (5)

தில்லையி லருள்வடி வாகி நல்ல
சீடர்க்கு மெய்ஞ்ஞானத் தெள்ளமு தீந்தே
யல்ல லொழித்தாளு மையன் பெய
ரருணாச லேசன்சற் குருவாகுந் தோழி. (6)

நிரு பந்துமா கருணா நிதி
செய்யும் பிழைகள் பொறுத்தருள் செய்வோன்
ஆனந்த ஞலெமைத் தன்னான் அவ
னடியைமெய்ப் பத்தியா லணைவோராந் தோழி. (7)

நாமுறும் விரகத்தை நீக்கி யைய
னமக்குப்பே ரின்பத்தை நல்குமா றெங்ங
னுமெனின் மிக்க கருணை சுரந்தருட்
கண்ணா லமைத்தெமை நோக்குவான் றோழி. (8)

தன்னுடை வாயாகுங் குய்யத் தூறுந்
தத்துவ மசியாதி வாக்கிய விந்தை
மன்னிட நஞ்செவி யோகி தன்னின்
மாறுது பாய்ச்சுவன் வழுவாதென் றோழி. (9)

தத்துவ விசாரக்க ருப்ப நன்றாய்த்
தங்கித்தே கோகமே யென்கின்ற நீட்டுச்
சுத்தமாய் நின்றுசி வோக மென்னுஞ்
சுயஞானக் குரவனைப் பெறலாநாந் தோழி. (10)

ஆநந்த மஞ்சரீ ராட்டிப் பர
மாத்வைதப் பொட்டிட்டு மாமாயா தீத
மானமு லைப்பால ருத்தி மிகு
மன்பாய்வ ளர்த்திட வாநந்தந் தோழி. (11)

அஞ்ஞாந முதலிய பக்ஷி தோட
மணுகிஞ னமக்கைய னருள்செய மந்த்ரம்
மெய்ஞ்ஞானச் சவணாதி தன்னாற் பூதி
மேலிட்டு நன்றாய்வி லக்குவோந் தோழி. (12)

தடையறு நிருவிகற் பாநு பவ
சாதம ளித்தத்த நுவைவ ளர்ப்போ
மிடையறு மாநிர திசயா னந்த
மெந்நாளும் பெற்றுநா மிருக்கலாந் தோழி. (13)



லயமாதி தடையற்ற தொட்டிற் பிள்ளை
நன்றாய்ச்சு காநந்த நித்திரை செய்து
சயமாக மேற்சாக்ஷாத் கார மான
சாக்கிரத் துற்றூற்ச கலமுந் தானும். (14)

இஞ்ஞாநப் பிள்ளையி னோடே நாம்
இருவரு மொன்றாக விசைந்துபே ரன்பாய்
விஞ்ஞாந மாகிய மேலா மொப்பில்
விளையாடல் புரிகுவோ மின்னேயென் றோழி. (15)

தேகாதி மூன்றுஞ் சடமா மேலாஞ்
சித்துவி லாசமே யெங்கு நிரம்பி
யாகாதெல் லாமாகி நிற்குஞ் சுத்த
மான பிரமமா மென்கண் மணியே. (16)

அவத்தாத் திரயவ தீத சாக்ஷி
யகமே யனைத்துக்குங் காரண மான
சிவஞ்சாந்த நித்திய ரூபந் திவ்ய
திவாகர னென்றெங்க ணிச்சய முத்தே. (17)

சமட்டி தூலதேக மாதி சிருட்டி
தன்னொடு திதிலயம் வைசுவா நானும்
அமட்டருஞ் சூத்திராத் மாவு மந்த
ரியாமியுந் தற்பத வாச்சிய மய்யா. (18)

அந்ந மயகோச மாகுந் தூல
மாதிக ளுக்கன வோடு சுழுத்தி
துன்னும் விசுவன்றை சதனும் பிராஞன்
சுத்தமி ரெம்பத வாச்சிய மப்பா. (19)

தற்பத லக்ஷிய மாமீ ஸ்வா
சாக்ஷியே தொம்பத லக்ஷிய மான
வற்புத மாஞ்சீவ சாக்ஷி யாகு
மான விதுவதென் றறிந்தோமே பொன்னே. (20)

சத்தோகஞ் சர்வச மோக நித்த
சாந்தோகஞ் சருவ பரிபூர ணேக
முத்தோகம் பரப்பிர மோக மேலா
மூதறி வாயொளிர் மோனேக நிதியே. (21)

நிருமல நிருபத்தி ரோகஞ் சுக்க
நிரஞ்சன நிட்கம்ப நிரவய வோகங்
குருதுரிய சொரூபோ கமே மேலோர்
கொண்டாடுஞ் சைதந்யோ கமென வாழ்வே. (22)

அமலோக மப்பிரமோக மேக மென்று
மழியாச்சு கோகம நாசிர யோகம்
விமலோகம் வசனாதீ தோக மெய்யாம்
வேதாந்த மெய்ப்பொரு ளோகமென் னரசே. (23)

அகமமிர் தமக மேக மக
மத்வைத சார மகமேய சங்கர்
துகளில கமவி நாசி யகஞ்
சொப்பிர காசச் சுகந் தாமே. (24)

நின்றும் பறந்து நடந்து மிது
துனிகழிச் சராசர மானவை முற்று
மென்று மிருந்த படியே நிற்கு
மேகம் பரம்பொரு ளாமென தின்பே. (25)

இவ்வித மாய்விளை யாடி நின்று
லெம்மையி சைந்திடு துக்கம னைத்து
மெவ்வித மாயோடிப் போமோ வென்று
மிசையாதே பேரின்ப மிசையுமென் றோழி. (26)

வேதம னைத்தும் விளம்புந் துய்ய
விதிநிட்டை தங்கண மக்கில்லை யென்றே
போதமி குமிக்கு மூர்ந்தை நம்மைப்
புந்திசெ யச்செய்யும் பொய்யல்லத் தோழி. (27)



புண்ணிய பாவப லன்க ளேது
போதமே நாமென் றுணர்ந்த பொழுதே
திண்ணம தாயென்று மில்லை யென்று
சிந்தைசெ யச்செய்யுந் தேன்மொழித் தோழி. (28)

ஆயினும் லோகோப கார மாகு
மானவி திநம்மைக் கொண்டுசெய் விக்குது
காயம தோடுற வாகா தென்றுங்
கழல்வோஞ் சுதந்தரங் கண்ணேயென் றோழி. (29)

அற்புத மாமிக் குழந்தை யெமக்
கன்பா யளிக்கு மருணாச லேசன்
தற்பத மெங்கிருந் தாலு மங்கே
சத்திய மாய்நாந்தி யானிப்போந் தோழி. (30)

சச்சிதா நந்தசி வோகஞ் சுத்த
தற்பத லக்ஷியஞ் சகத்கார ணேகஞ்
சச்சிதா நந்தசி வோகம்.

ஆநந்தக்களிப்பு முற்றிற்று.

அருணாசல ஞாநதேசிகர் பாதமே கதி.

10171
Q1:4173
KOVILOOR MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA






## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 4 | பனை | புனை |
| 7 | 27 | மற்றைய | (மற்றைய அந்தமில் நான்கொடு நான்கு மணைய) |
| 9 | 14 | ரின்பமதாய் வாழ் | ரின்பாய்வாழ் வாய் |
| | 22 | சார் | சார்வாய் |
| 11 | 7 | னிற்றிரீயே | னிற்றியே னீ |
| | 20 | மாறுதளிப்பான் | மாறுதளிப்பன் |
| 14 | 17 | மிது துனி | மிங்ஙனி |
| 15 | 6 | விக்குறு | விக்குங் |

திருப் பூவணம் மடாதிபதி.

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்.

# இயற்றிய நூல்கள்.

---

| | | | |
|---|---|---|---|
| 1. | மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தும் சதாநந்த அவதூத பாஷ்யமும் ... ரூபாய் | 0 | 8 |
| 2. | வியாச தாத்பரிய நிர்ணயம் ... | 0 | 8 |
| 3. | நைஷ்கர்ம்ய சித்தி ... | 0 | 8 |
| 4. | ஸ்வாராஜ்ய சித்தி ... | 0 | 8 |
| 5. | வேதாந்த சஞ்ஞா ... | 0 | 2 |
| 6. | விசார சாகரம் ... | 2 | 0 |
| 7. | வேதாநந்த சாஸ்திர ரத்நாவலி ... | 2 | 0 |
| 8. | ஈசுவர கீதை மூலம் ... | 0 | 4 |
| 9. | பிரஹ்ம கீதை மூலம் ... | 0 | 6 |
| 10. | பகவற் கீதை மூலம் ... | 0 | 6 |
| 11. | பஞ்சதசி மூலம் ... | 0 | 10 |
| 12. | சிடாசாரம் மூலமும் பாலபோதினி உரையும் ... | 0 | 4 |
| 13. | ஈசாவாஸ்யோபநிஷத்தும் ...மும் ... | 0 | 4 |

—